படலைவிழூங் கரியகுழல் கன்னியொரு பாலிருக்கு
மணியே போற்றி
பொடியணியுந் திருத்தோளிற் சிங்கவுரி புனைந்தபாரர்.
பொருளே போற்றி (௫௯)

கலிநிலைத்துறை.

நிலைதந்தரா போற்றியென் றிறைஞ்சினு னிமலன்
சால நாம்வரந் தருகுவோ முனையெனத் தவத்தோ
ரூல மார்ந்தநீ தோன்றிய தொன்றுமே யமையும்
பாலி னுண்டபோர் வேறுமோ ருணவினைப் பாரார்.(௬௰)

இந்த லத்தினி லுறுதின மிடைவிடா திருந்து
பத்தி யிற்புரி பூசையின் பலத்தினைப் பலிப்பா
யெந்த லத்திலே யிருந்தவ ருனைநினைத் திடினு
முந்த ராம்வர முதவுவா யென்னவு மொழிந்தான்.(௬௧)

வரமி யாவையு மப்படி யருளியே மறைந்தான்
பிரம னூரண னறிவுரு தொருதழற் பிழம்பாம்
பரம காரணன் மறைதலு மலைவலம் பண்ணி
யரன தாணையாற் பொதியமால் வரைமிசை யமர்ந்தான்.

ஒருமலைத்தலை யிறங்கிமற் றொருமலை யுடையப்
பொருது மற்றொரு மலைதனை வணங்கிநீள் பொதிய
மருமலைத்தலை யமர்ந்திடுஞ் செயலெலாம் வகுத்தாம்
பொருமலைச்சிற கரிந்தவன் கதையினைப் புகல்வாம்,

---

அகத்தியச்சருக்கம்

முற்றிற்று.

ஆக சருக்கம் ௩-க்கு திருவிருத்தம் -௱௫௧.

சிவமயம்.

# இந்திரச் சருக்கம்.



கலிநிலைத்துறை.

முன்னர் நாளிலே யுளனொரு தானவர் முதல்வ
னன்ன வன்பெயர் நினைக்கினு முலகெலா மழியுஞ்
சின்ன பின்னமாய்ப் பொடிபடு மவன்பெயர் செப்பின்
பொன்ன கந்தனைத் திருப்புவன் கதையினாற் புடைத்து

ஏழு வாரியுங் கடப்பனேழ் தலத்தையு மெடுப்ப
னேழு பாதலங் களினுமுட் புகுதுவ னிரவி
யேழு மாவணி யிரதமேற் றிரிகுவ னெங்கு
மேழு நாகமு மேழுமே கங்களு மெடுப்பன். (௨.)

வாயு வானவன் விழியிலே வருணனை வகுப்பன்
றேயு வானனந் தன்னிலே பவனனைச் செறிப்ப
னாயி ரங்கணன் மனத்திலே கனலினை யடைப்பன்
பாயு மூவிலைச் சூலமென் மறலியைப் பதிப்பன் (௩)

ஈம வங்கியி னிணத்தினை நறுநெயா விறைத்துத்
தாம மானிடர் குடர்களைத் தருப்பையாச் சமைத்து
நாம வென்பினை யிந்தனத் தொகையதா நாட்டி
யோம வேள்விமுன் மடந்தையர் தமைவரைந் துவப்பன்

வெருவி லங்கவன் வேட்டையில் வதைத்திடும் விலங்
கைப், பொருவி றேவர்தம் முடிமிசை யெடுப்பது பொ

ந்தார, னிருடி மார்கண்மேற் சுமத்துவ னேதிரு மெ ன்னின், மருவு மங்கவர் சடிலமே சுமடதாம் வழந் தால். (௫)

செப்ப மென்பவன் மொழிமையை யிமையவர் திர ளிடு, குப்ப மால்வரை யிந்திரன் றன்னொடு கூற, வப்ப ருமலர்த் தருநிழற் பொருந்திய மகவா, னம்பு ராசியிற் பாயிப்பவற் கவையெலா மறைந்தான். (௬)

இந்த வாசகங் கேட்டலு நெடியவ னிசைப்பான், சிந் தி யாதுசெல் படைத்துணை யாகயாஞ் செல்வா, முந்தி யேமென வுரைத்தனன் புகர்ப்புழை முகத்துத், தந்தி வாகனத் தேறினன் சதமகன் சமர்க்கு. (௭)

போத காதிய ருடனிவ னெழுந்தனன் பொருதற், கோதி னாரவன் வரவெலா முணர்ந்துக் கொற்றார், தீதுகா ரிமே யிவர்க்கெனக் கனன்றுகண் சிவந்து, யாதுதானவர் தானவர் கணத்தொடு மெழுந்தான். (௮)

குந்த மூவிலைச் சூலம்வா ளோமரங் குனிவில், பந்தி யாகவே நடந்தன தொடர்ந்தன பரித்தேர், தந்தி யாதிய வொருங்கின பதாகையின் சால், நந்து காகள முரசு மான் முழங்கிவை நரன்ற. (௯)

கடலி ரண்டுபோ லிருவர்தம் படைகளுங் கலந்த
புடலி நீடுயிர்ப் பொழுதுக ளனைத்துகள் பொலிந்த
வடலை யாயின வுலகமற் றமரரு மங்கைப்
படையெ லாமிழந் தேகினு ரிந்திரன் பார்த்தான். (௰)

வான வர்க்கிறை வச்சிர மாகிய மலையைந்
தான வக்கட லளறுபட் டலைவுறச் சலித்தா
னுன வங்கடல் கொடுத்தது நிணப்பெய ரமிர்தஞ்
சேன மற்றுள வலகையா மிமையவர் தெவிட்ட. (௱௧)

செப்ப னென்பவ னும்பர்கோன் களிற்றெதிர் திரு
ம்பிக், கம்ப மால்களிற் றுச்சிமேற் புடைத்தனன் கதை
யா, லெப்பு ராசிநேர் கருநிறத் தவுணன்மே லாக, வும்
பர் நாயக னழுத்தினன் வச்சிரா யுதமே. (௱௨)

வச்சி ரத்தினைப் பறித்தெறிந் தெழுந்தெதிர் மலைந்து
முச்சி ரத்துவே லெறிந்தன னிந்திரன் முகத்தின்
மெய்ச்சி ரத்தினிற் கதையினாற் புடைத்தனன் விழுந்
பச்சி ரத்தமேற் பறந்தன சிவந்தன பாவை. [தான்

அச்ச மாகிய விந்திரன் றுயரொலா மகற்றிப்
பச்சை மாயனும் படைகளும் வரங்களும் பலித்தான்
வச்சி ராயுதன் செம்பனை யுருகென மலைந்திட்
டச்சி வேற்றப் பறித்துவெம் பகையெலாமொழித் தான்

கலிவிருத்தம்.

தானவ னெனுங்களை தவிர்ந்து போனபின்
வானவ ரெனும்பயிர் வளர்ச்சி யாகிய
வூனமி லிந்திரற் குள்ள மீதிலே
ஞானம்வந் ததுமுதற் பழிக்கு நாணியே. (௱௫)

வாசவ னிப்படி வருந்து நாளிலே
தேசிகன் குறுகியோர் தெளிவு கூறுவா

ஞசமி றெக்கண கயிலை நாதனைப்
பூசனை புரியிவை பொடிபட் டேகுமே. (௰௬)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

என்று மொழிந்தா னிந்திரனு மிமையோர் குரு
வின் மெய் மொழியாற், சென்று கயிலைச் சிவதடத்திற்
படிந்தா னிறையைச் சேவித்தான், குன்றி னிகராய்
வருவினையுங் குன்றி யெனவே குன்றியதா, லன்றுமு
தலாத் துயர்களைதல் பொன்போ லிலையென் றறிந்தன
மே. (௰௭)

கலி விருத்தம்.

துள்ளிய செம்பனைத் தொலைத்த வான்பழி
தள்ளுவான் பொன்றுறைத் திட்ட தன்மையால்
வள்ளலைத் திரிசிரா மலையிற் போற்றினான்
வெள்ளிவெண் கயிலையான் விடையிற் றோன்றினான்.
பொரும்பழி நீக்கினேம் வினையும் போக்கினேம்
விரும்பிய தளித்திட விளம்பு கென்றன
னிரங்கியிம் மலைதொழு மெவர்க்கு மக்கணந்
தரங்கையும் பாவமு மகல வேண்டுமே. (௰௯)

கன்னியிற் பூரணை கலந்த நாளிலே
மன்னிய சிவதட வனத்தின் மூழ்கியே
துன்னிய துரோணவெண் மலரைச் சூட்டுவா
ரங்கிலை சிவகதி யடைய வேண்டுமே. (௨௰)

இப்படி யிந்திர னியம்பி யேத்தினு
னப்படி யாகவென் றானுங் கூறினான்

மைப்படர் கயிலைமால் வரையி னீங்கியே
கைப்படை யிந்திரன் களிற்றிற் போயினான்(௨௧)

இந்திரச்சருக்க முற்றிற்று.

ஆக சருக்கம் ௪-க்கு திருவிருத்தம்-௱௭௪.

# தீர்த்தச்சருக்கம்.

கலிவிருத்தம்.

கோதம னிந்திரன் கதைதனைக் கூறலு
மாதவ ரனைவரும் வணங்கி வாழ்த்தியே
பூதரா குமரியப் பொருப்பி லெய்திய
தியாதுகொ லெனமுனி யியம்பன் மேயினான்(௧)

முக்கணன் றனையுமை முன்னோர் நாளிலே
மிக்கதெவ் வரையெனத் தனிவி னாவினா
ணக்கனு மிறைவியே நடுவி னெய்திய
தெக்கண கயிலையே சிறப்பென் றோதினான். (௨)

அன்னவா சகஞ்சொல விரும்பி யம்பிகை
யென்னகா ரணமதோ விமய நீங்கியே
புன்னைமா மலர்ப்பொடி பொதிந்து பொன்மலை
வன்னமாந் திரிசிரா மலையை மேவினாள். (௩)

விருப்பினு லவ்விடை முழுக வேண்டியே
பொருப்பெலாந் தேடினுள் பொய்கை காண்கிலா
ளருப்புலா முலையவ ளதனை வேண்டியே
பருப்பதா லயனிரு பாதம் போற்றினுள். (௫)

வெங்கரா சலவுரி தரித்து வெண்பொடி
யங்கரா கமெனவ் வணிந்து வெண்மதி
பொங்கரா முடிமிசைப் புனைந்த புங்கவா
சங்கரா விதனிடைந் தருக தீர்த்தமே. (௬)

மச்சமாய்க் கமடமாய் வராக மாகிய
வச்சுதா நந்தனுங் கரிய வண்ணலே
விச்சையாய் நாதமாய் விந்து வாகிய
சச்சிதா நந்தனே தருக தீர்த்தமே. (௭)

ஆதியா னவனரு வான வாணியா
லோதுவான் கங்கைநீ ருனக்கு வேண்டிய
தேதுகா ரணமென விறைவி மூழ்கி யான்
போதினு லருச்சனை புரிய வென்றனள். (எ)

தந்தன மெனச்சொலிச் சடையிற் கங்கையை
யந்தர மிசையினும் விடுக்க வந்நதி
யுந்திய கடலெலா மோர்வ தாமென
வந்தது பிரளய வனம தாகவே. (அ)

சங்கென மிதந்தனன் சலத்திற் சந்திரன்
வெங்கதிர் பங்கயம் போல மேவிய

தங்குள வரையெலாங் கமட மாயின
மங்குலுஞ் சைவல வனங்க ளானவே. (௯)

உலகெலாந் தெரிவுற லூழி காலமென்
றலகிலா வுயிர்களு நடுங்க வாயிரந்
தலையரா வசைவுறத் தறுகட் டவிழிக்
குலமுதா சலம்விழ வதுகு தித்ததே. (௰)

மண்ணிடை யதுவரும் வசவி னுறுதற்
கண்ணினன் மணிவிழிக் கடைசி வந்தது
பெண்ணியல் கங்கையும் பெரிது மந்சியே
புண்ணிய தீர்த்தமாய்ப் பொருப்பை யுற்றதே.

அங்கது வடதிசை யருகி லேசிவ
கங்கையென் றொருபெயர் காண நின்றது
பொங்குமத் தடத்திலோர் புறத்தி லேசிவ
சங்கரன் றோன்றினன் சயம்பு வாகவே. (௰௨)

அந்துறை தடத்திலே நவ்வி மூழ்கினள்
மந்தர கிரிதொழும் வரையின் மேவினள்
சந்தத மிப்படித் தவஞ்செய் நாளிலோ
ரந்தணன் போலவே யமலன் றோன்றினன். ( )

வெள்ளிய பஞ்சினும் விளர்த்த குஞ்சியன்
றள்ளிய நடையினன் றளர்ந்த கோலின
னள்ளிய மூப்பின னழகு மேனியன்
றுள்ளிய வெயரின னாகிச் சொல்லுவான். (௰௪)

அனிச்சமுந் திறையிடு மழகு மேனியுங்
கனற்செறி தவந்தினாற் கருக வேண்டுமோ
நினைத்தது தருகுவா னிமல னிந்தவந்
தனிச்சிலை நுதலியே தவிர்க வென்றனன். (மிரு)

ஓதிமந் தவத்தினை யொழிந்து சிந்தையில்
வேதிய னருச்சனை புரிதல் வேண்டினாள்
கோதற மாலினி குறிப்பி னல்கினாள்
சோதியு மறைந்தபின் விடையிற் றோன்றினான்.

ஏற்றினை னதிர்நடந் திறைவி யெய்தினாள்
போற்றினா ளருந்தவம் புரிந்த வெந்துய
ராற்றினான் றிருமுடி யைந்தி னான்மதிக்
கீற்றினா னவளுடன் கிளத்த லாயினான். (மிசா)

பொருசிலை நுதலியே புகன்ற யாவையுந்
தருகுவ முனையெனச் சயில நாயகி
யுரைசெயு மித்தலத் துள்ள யாவையு
மருவுமென் பெயரினால் வழங்க வேண்டுமே.

ஆதியே யிறுதியே யாதி பூரமென்
றோதிய நாளினோ நவமி யோங்கினாற்
றீதற வேவலஞ் செய்த பேர்க்கெலாஞ்
சோதியே நல்வரஞ் சொரிதல் வேண்டுமே. (மிசுஅ)

பூமழை யிமையவர் பொழிந்து போற்றினார்
மாமலர் முடிமிசை மணத்தை வீசிய

தேமலி மடந்தையைத் தெய்வ நாயகன்
கோமள மட்டுவார் குழலி யென்றனன். (உ௰)

விடைமிசை யுலவிய விமல னோர்தம
திடமிசை யிருந்தன ளிமய நாயகி
சடைமிசைப் பிறங்கிய தாம நாயகி
கடலெனு மொருசிவ கங்கை யாயினள். (உக)

ஒருதுளி பருகினு முடலி னோயறு
மிருதுளி பருகினோர்க் கின்மை யின்மையா
மருளுடன் றுளிகண்மூன் றருந்தி னைவர்
கருதிய பொருளெலாங் கரத்திற் கூடுமே. (உஉ)

சிவநதி யெனச்சொலிற் றேவ ராகுவர்
சிவநதி சிவநதி யென்று செப்பினாற்
பவமறும் பலபடப் பகர்ந்த பேர்க்கெலா
மவனியிற் பரகதி யடைத லாகுமே. (உங)

தடத்தினை வலஞ்செய்வார் தம்மை வானுல
கிடத்தினில் வலஞ்செய்வா ரிந்தி ராதிய
ரடுத்ததின் மூழ்கியவ் வமிர்தங் கொண்டபேர்
விடத்தினை யருந்திய விமல னாவரோ. (உச)

அத்தட மூழ்கினோர்க் கலகை நோயற
மெத்திய பகையற வினையின் வேரறப்
புத்திர செல்வமும் புகழும் வீரமுஞ்
சித்தியு முத்தியுஞ் சேர்த றிண்ணமே. (உரு)

நீணிலம் புகழுமந் நீரின் மூழ்கினோ
ரொணவை மெனுமுயி ரழுக்க நீங்கிடும்
பாணியி னொருதுளி பயங்கொண் டார்தமைக்
காணாலும் பயங்கொளுங் கடிய காலனே. (௨௬)

கலிநிலைத்துறை.

சந்த மாதரு மத்தடம் படிந்துமா தவந்தாற்
பத்தி யாலர னருளினாற் பெருநலம் படைந்தார்
சித்தர் சாரண ராக்கத ரியக்கர்கந் திருவர்
முத்த ராயின ரந்நடந் தன்னிலை மூழ்கி. (௨௭)

அரவ மானது மதுகர மானது மந்தத்
திரிசி ராமலைத் தடத்துமுற் றவத்தினாற் செறிந்து
பரவி மாதவம் புரிந்தர னருச்சனை பண்ணிப்
பிரிவி லாதிறை கர்ரணு திப்பதம் பெற்ற. (௨௮)

கழுகு நாயகன் முன்னமத் தடத்திலே கலந்து
முழுகி நாயக னருளினா லருந்தவ முடித்தா
னழகு நாயகி நாயக னினிதெழுந் தருளி [தான்.
மழைய தாமென வரமெலாம் பொழிந்தனன் மறைந்

எழுவராகிய முனிவரத் தடத்திலன் பெய்தி
முழுகி மாதவ முயன்றுநல் லருச்சனை முடித்தார்
விழைவ தேதென வினவினா னரனவர் விரித்தார்
தழுவி மேனியி லடக்கினான் கலந்தனர் தவத்தோர்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

நன்றுடையா னெனவுலகோ ரெடுத்துரைக்கு மோ
ருதீர்த்த நவமதாக, வொன்றுளதா யிருக்குமது குண

திசையில் விளங்குமதி லுவந்து மூழ்கிக், குன்றுடை யா னடிதொழுவார் பிறப்பகலு மிறப்பகலுங் கொடு மை தீருந், தென்றிசையிற் பயதிலா னெனுந் தீர்த்த மளிக்குநெடுஞ் செல்வந் தானே. (௩௧)

மனத்தின்வரு வினைகளெலாம் விதிதடத்தா லகலு மன வாக்கினாலே, கனத்தவினை யொழியும்வட திசை யின்வரு கங்கையினாற் காயம் வாக்கா, னினைத்தமையா லடைந்தவினை குணதிசையிற் றடமூழ்கி னீங்கு மிந்த, வினைத்துமகன் றறம்பெருகும் பயதிலா னெனுந்தடத் தி னெய்து வோர்க்கே. (௩௨)

தீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

ஆக சருக்கம் ௫-க்கு திருவிருத்தம்-௨௱௯.

# திருநகரச்சருக்கம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

இங்கதை பலவு முனிவர்தஞ் செவியி னினியவா ரமிர்தென விசைத்த, மெய்க்கவு தமனை வணங்கிமா தவர்கள் வினவுவா ரனகமா தவனே, தெக்கண கயிலை மலைசிரா மலையாந் திருப்பெயர் படைத்திடு சிறப்பை, முக்கண னருளான் மொழிகவென் றுரைத்தார் முனிவனு மவர்க்கிவை மொழிவான். (௧)

கலிநிலைத்துறை.

முன்ப ரக்கருக் கதிபதி யிராவணன் முனிவாய்த்
தென்பு லத்துறை திரிசிரன் றூடணன் கரனே
யென்ப வர்க்கருஞ் சிறப்பளித் திம்மலை யிடத்தின்
வன்பு பற்றிய பகைகெடுத் திடும்படி வைத்தான். ([illegible]

பூரணி ருந்துறை கொடுமுடி யவன்பெயர் காட்டும்
பெருகு தூடணை றுறையிட மவனது பெயராந்
திரிசி ராவதி னுறைதலாற் றிரிசிரா மலையா
மிருவர் பேரொழித் தொருவன்பே ராகவே யிலங்கும்

றூட ணன்கர னிருவரு மிரும்பகை தொலைத்து
விட னன்றிருந் தயனங் கழைப்பவவ் விறலோன்
றாட ணைந்தன ரிராவணன் றனதுறு மதியா
லேட ணைந்ததாற் றிரிசிரன் பின்னுமங் கிருந்தான்.

துண்ட வெண்பிறை முடியனை யனுதினந் தொழுது
மண்ட பங்களு நவமணி குயிற்றிய மதிலுங்
கொண்ட றங்கிய கோபுரச் சிகரமுங் குழுமி
யண்ட ரின்புற மயன்சமைத் திடும்படி யமைத்தான்.

தந்தி யீருரி போர்த்தவற் காலயஞ் சமைத்திட்
டந்த மால்வரைக் கீழொரு வளம்பதி யமைத்து
மந்த ராசல மேறும்படி யாமியம் வகுத்துக்
கந்த மாதன வரையென வெயில்களுங் கண்டான். (௬)

பைய ராமணி கோபுரத் தலந்தொறும் பவளத்
துய்ய நீள்கொடி நிகரென விரித்திடு சுடர்க

னைய ஞாலயம் வலஞ்செய விறங்குதுங் கமரர்
செய்ய நாலிறைற் சமைத்திடு மேனிபோற் றிகழும்.

கலிவிருத்தம்.

கொடிச்சிய ரணிமலர்க் குறிஞ்சி சேரளி
யிடைச்சியர் குழற்றளை விதழின் மேவுமே
கடைச்சிய ரெறிதரு கரும்பின் முத்தினுற்
படைச்செறி கடற்கரைப் புள்ளு நீங்குமே. (அ)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

பரவைதான் பொய்கை யாகப் பதுமமே
தரணியாக
மரையினு ளிதழ்க ளெல்லா மற்றுள
தலங்க ளாக
விரைகமழ் பொருட்டு செந்நெல் விளைமழ
நாட தாகத்
திருமக ளாகித் தோன்றுந் திரிசிராப்
பள்ளி தானே. (சுஉ)

கலிவிருத்தம்.

காம ரம்பொற் கன்னி மருங்கெலாந்
தாம ரைக்கிடை தண்கயல் பாயுமே
தேம டுத்த கடைசியர் செவ்விய
மாமு கத்தினும் வாள்விழி பாயுமே. (ம)

ஆறு மேதியு மார்தலி லம்புயம்
பானல் சிந்தும் பரிமளத் தேறலாற்

சோலை போன்முலைப் பாலைச் சொரிதலாற்
றேனும் பாலு மருத்தண் செய்களே. (௰௧)

கலிநிலைத்துறை.

முத்தி னஞ்செறி தடமொரு நான்கினு முழுகி
யத்த னின்புற வருச்சனை புரிந்தன னதன்பின்
மெய்த்த வம்பல வியற்றின னங்கவன் மெலிந்தும்
பத்தி சோதனை யறிந்திட விருந்தனன் பரமன். (௰௨)

இன்ன மென்னெதிர் முன்னவன் றோன்றிடா திருந்த
தென்ன காரண மெனச்சொலித் தன்றலை யிரண்டை
வன்னி மீதரிந் தாகுதி கொடுத்தனன் மற்றைச்
சென்னி தன்னையு மரிந்திடக் கரத்துவாள் சேர்த்தான்.

அனையன் வாளினால் விரைந்துதன் கழுத்தினை யரிய[ன்
னினையு மெல்லையில் விடையின்மேற் றோன்றின னிமல
கனக மாமலர் மதுமலர் சொரிந்திரு கரத்தாற் [ற்றி.
புனையு மால்விடைக் கெதிர்நடந் திறைஞ்சினன் போ

ஐம்மு கத்தனை யறுமுகத் தவனையு மரிய
கைம்மு கத்தவன் றன்னையு மருளிய கனியை
மும்மு கத்தவ னான்முகன் முதலினோர் முன்னே
யெம்மு கத்தினும் பாவினன் பாவியோன் றிசைப்பான்

நாக நாதனே யுனக்குமிந் நகர்க்குமென் னுமை
மாக வேவரந் தருதியென் றிறைஞ்சின னவனுக்

கேக நாதனு மப்படி யாகவென் றியம்பி
மாக மீதினில் வலிமழ விடையொடு மறைந்தான். ௰சு

திரிசி ராவுமத் தலத்தினை யகன்றவை தெரியும்
பரிசி ராவணற் குரைத்தகன் றிலங்கையாம் பதியி
லரசு போனபின் கதியடைந் தனனென வறைந்து
முரசி ராகவ னருச்சனை புரிந்தது மொழிவான். (௰எ)

திருநகரச்சருக்கம்
முற்றிற்று.
ஆக சருக்கம் ௬-க்கு திருவிருத்தம். உ௱உ.ரு

# நிலைத்தது கொடுத்த சருக்கம்.

கலிவிருத்தம்.

தயரதன் மதலையா மிராமன் றுடகை
தூயருறப் பொருதுசா னகியைத் தோய்ந்தபி
னயர்வுறும் பரதனுக் கரசு நல்கியே
கயலுகள் சரயுவைக் கடந்து போயினான். (க)

சானகி மயிலுடன் றம்பி தன்னுடன்
கானக மடைந்தொரு கணையி னானுற
மாநக மடந்தைமூக் கரிந்து மாரிச
மானையு மழித்துவா லியையு மாட்டினான். (உ)

விராவுறு கர்ந்தனைத் தொலைத்து வேலையைத்
தராதர நிரைகளாற் றடுத்துத் தம்பியோ
டிராவண னுயிர்குடித் திலங்கை வாழ்வினைப்
பராவுறு விடணன் பரிக்க நல்கியே. (௩)

புட்பகத் திவர்ந்துதன் னகர்க்குப் போதுவான்
விட்புலம் படர்தரு பொழுதுவ் வெற்பினைக்
கட்புலங் குளிரவே கண்டு போற்றினான்
சட்பதங் குடைந்தெழு தாம மார்பினான். (௪)

இழிந்தனன் சிவதடத் தினிது மூழ்கினான்
பொழிந்தனன் பன்மலர் புயலி னீரென
வழிந்தன விழியமை வணங்கி னான்மிக
மொழிந்தனன் சிவமெனு மூல மந்திரம். (௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மின்வாகி கொண்டசடை யிறைவனே போற்றிசதுர்
 வேத மாக
முன்வாகி கொண்டவனே கனலெரிய நின்றாடு
 முதல்வா போற்றி
தென்வாகி கொண்டபுரந் திரியநகைத் தருள்பரம
 சிவனே போற்றி
பொன்வாகி கொண்டவனே வெள்ளிமலை யுடையானே
 போற்றி போற்றி. (௬)

கலிவிருத்தம்.

பூசனை புரிந்தவன் புகழுங் காலையி
லீசனும் பலவர மீந்து போயினான்

கோசல மெனுந்தலங் குறுகி ராகவன்
வாசவன் மகிழ்வுற மகமி யற்றினான். (௭)

ஒருதல மிறந்தவர்க் குறுதி நல்கிடு
மொருதலம் பிறந்தவர்க் குறுவு தற்கதி
யிருதலந் தம்மினு மெய்தும் யாவையுந்
தருதல மிதுவலா றனையி னில்லையே. (௮)

நாவலந் தீவினந் நகரை நண்ணியே
தேவரு முனிவரு நரருஞ் சித்தரு
மாவுடன் பறவையு முரக மாதரும்
யாவரும் பரகதி யெய்தி னார்களே. (௯)

கலிநிலைத்துறை.

ஐந்து பேர்தமக் கொருத்தியே தேவியா மளவில்
வந்து நாரதன் மொழிதரு வானையெவ் வொருவ
னிந்த யாதினைப் புணருமிவ் வியல்புகல் லெதிர்ந்தோர்
தந்து பூமியை வலஞ்செயத் தகுமென நவின்றான்.

அன்ன நாளினி லருச்சுனன் றருமனோ டவனைக்
கன்னல் வேளுட னிரதியோ டிருப்பது கண்டா
னின்ன தீவினைக் குரிகினை வலஞ்செய வெண்ணி
மன்னு நாவலந் தீவினத் திசையிலே வந்தான். (௰௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

ஓங்காரனை பூசித்த காளத்தி யிறையவனை
யுவந்து போற்றித்

தூங்கானை மாடத்தி லெகலாமல் விளங்குபாஞ்
சுடரை வாழ்த்தித்
தீங்கானை தனையுரித்த வழுவூர னிருசரணஞ்
சிரத்தி னேற்றிப் [யைப்
பாங்கானைக் காவிலுறை யகிலண்ட வுமையிறை
பணிந்து போனான். (௰உ)

கலிநிலைத்துறை.

நரன ருச்சுன னெனும்பெய ருடைய வனன்கா
வரன ருச்சனை புரிந்தன னமலனு மவற்கு
வரம ளித்தனன் மடந்தையர் பலரையு மணந்து
பரக திப்பய னடைந்தன னெனமுனி பகர்ந்தான்.

அறிந்த பாவமும் வலிகெடு மறிவிலா மையினாற்
செறிந்த வல்வினைக் கடனுமந் தலத்திலே தீரும்
பிறந்த மானிடப் பிறவியிற் பலன்களும் பெறலா
மிறந்த போதினிற் பிறந்தபேர் முத்திபெற் றிருப்பார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மனுகு லந்தனி லிரவி புங்கவன்
மதலை தந்தரு டயாதன்
றனுச னங்கவ னனுச னென்பவர்
தமது வெம்பகை தவிரவே
கனலி லங்கையி லிடும வன்சொரி
கருணை யஞ்சனை பாலக

னனுமெனென்பவன் மலையில் வந்ததி
லரிய நன்புன லாடினான். (யரு)

மால யன்றொழு வானை நண்பகன்
மாலை கங்குலின் மாலையா
லால யந்தனின் மேவி மஞ்சன
மாதி கொண்டடி பேணினான்
வால சந்திர ரேகை தண்புனன்
மாசு ணந்திகழ் வேணியான்
வேலை நஞ்சணி நீல கந்தரன்
மேவி னன்விடை மீதிலே. (யசு)

குன்றெ னத்தொழு தனுமனின்றனை
னிறைய மன்பொடு கூறுவா
னன்று னக்கினி வரம ளித்திட
நவிலு வாயென மொழிகுவா
னென்றன் முத்திரை யன்றலத்தினி
லெய்த வேண்டுமெ னச்சொனா
னன்ற ளித்தன னரிய செல்வமு
மடைக வென்று மளித்தனன் (யஎ)

---

நினைத்தது கொடுத்த சருக்கம்
முற்றிற்று.

ஆக சருக்கம் எ-க்கு திருவிருத்தம் உளசய.

சிவமயம்.

# சாரமாமுனிச் சருக்கம்.

கலிநிலைத்துறை.

என்று கூறினன் கோதம னவன்றனை யிறைஞ்சி
நன்று கூறினை யெனச்சொலி யிருடியர் நவில்வா
ரன்று சாரனென் றொருமுனி தவஞ்செய வதிலே
சென்ற வாறெலா முரைக்கவென் றனர்முனி செப்பும்.

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பரம யோகி யொருவ னுண்டு
பகரின் மூன்று கத்திலே
பிரம சன்மன் மறைக ணன்கு
மங்க மாறு பேரமும்
சரத லாம கைம தாக
வுணர்வில் வைத்த காரணன்
வரையில் விற மிமய மீது
மாத வந்தொ டங்கினன். (உ)

அன்ன யோகி யருமை யான
தவமி யற்ற வமலனு
மின்னு ளாவு குன்ற மன்ன
விடையின் மீது மேவினன்

பொன்று ளாவு போது கொண்டு
பரம யோகி போற்றினு
னென்ன வேண்டு மென்ன யோகி
முத்தி வேண்டு மென்றனன். (௩)

இத்த லத்தின் முத்தி யில்லை
யிமய வெற்ப கன்றுயா
சித்த லத்து றைந்த சோம
சன்ம யோகி தேவிதன்
னைத்த லத்தி லெமிதெ னைப்பி
றந்து கண்ட ளிக்கவே
பத்தி செய்து நீயு மங்கோர்
பால னாப யத்தபின். (௪)

மனைது றந்து நெற்றி னண்ணி
மன்று காவி ரிக்கணே
திரிந்து வீறு திரிசி ராம
தர்க்க ளாய்ந்தி யெம்மையே
நனைகு ளாவு பாத லத்து
மலர் பறித்து நாடொறும்
புனைதி முத்தி யெய்து மென்று
சிவன்மொ ழிந்து போயினான். (௫)

அடல மைந்த பிரம சன்ம
னரிய யோக முறையினு
னுடலு றந்து சோம சன்மன்
மகிழ வந்து தித்தனன்

புடைநெருங்கு கலனி றைந்த
புணரி பொங்கு மகரமீ
னிடைநெ ருங்கு பால லைக்குண்
மதியெ ழுந்த தென்னவே. (௬)

சோம சன்மன் மனம கிழ்ந்து
செய்க டன்றொ லைத்தபி
னாம நாமி சைக்க வேண்டு
மென்று மெல்லை நாகமேல்
வாய்மை யொன்றெ ழுந்த திந்து
மைந்தன் மாத வத்தினாற்
றாம மார்ப நாமம் வல்ல
சார னென்று சாற்றுமே. (எ)

என்று ரைக்க மனம கிழ்ந்து
தந்தை தாய ரிருவரு
நன்றி யுற்ற சார னென்று
நாம மன்று நல்கினார்
பொன்ற லற்ற கல்வி கேள்வி
புனித நூலு ணர்ந்தபின்
மன்ற லுற்ற கோதை யோடு
மனைய றத்தில் வைகினான். (அ)

வயந்த புண்ட ரீக யாகம்
வாச பேய மாதிய

வியந்த பன்ம கம்பு ரிந்து
மெய்க்க டன்க ழித்தபி
னயந்து நன்ம கப்ப'யந்து
துறவ றத்தை நண்ணினன்
பயந்த பால னினிது தன்கு
லத்து நீதி பயிலவே. (சு)

முற்பி றப்பி னியல்ப றிந்த
முனிவில் சார முனிவனுந்
தெற்கி டத்தின் மேவி மிக்க
திரிசி ராம லைக்குள்வாழ்
பர்ப்ப தக்கொ ழுந்த ரான
பரமர் பாத மலரின்மே
லற்பு தத்தி னரிய போது
சொரியும் வண்ண மனுகினன். (எ)

கலிநிலைத்துறை.

கண்ட மட்டிலே யுருகின னாலயங்கண்டு, கண்ட மட்டிலே விடைஞ்செறி கடவுளைக் கழுகார், கண்ட மட்டிலேய் கருங்குழ லிறைவியைக் கண்டான், கண்ட மட்டிலே யடங்கிடா மகிழ்ச்சியாற் களித்தான். (அ)

பிரம னாரண னகத்தியன் முதலிய பெரியோர், பர ம யோகிய ரிமையவர் பணிந்திடும் பரனே, காரனு மங் கவற் கிளையவ னிருவருங் காண, விரவி போலவந் தரு ம்பல முதலிய விறையே. (௯)

அநும னென்பவ னருச்சுனன் வணங்கிய வரனே
யினிய மாதர்க ளெழுவரு மிறைஞ்சிய விறையே,வளை
யும் வார்குழ லுமையவள் வணங்கிய மணியே, தனிய
ரானவர்க் கன்னையே யெனச்சொலித் தாழ்ந்தான்.(௰௫

சிவந டத்திலே மூழ்கியம் மலைவலஞ் செய்து
பவம கற்றிடும் பொருட்டினி தருச்சனை பண்ணி
நவமு றச்செயும் பன்னசா லையினை நண்ணித்
தவமி யற்றினன் வேதவா சாரனுஞ் சாரன். (௰௬

---

சாரமாமுனிச் சருக்க
முற்றிற்று.
ஆக சருக்கம் அ-க்கு திருவிருத்தம்-உ௱௫௭.

---

# சூரவாதித்தச் சருக்கம்.



கலிவிருத்தம்.

வாழி யந்த வருந்தவ மாமுனி
தாழ்வ ருங்கதை தன்னை நிறுத்தியே
சோழ னவ்விடைத் தோன்றி யதுமவன்
கோழி மாநகர் கண்டதுங் கூறுவாம். (௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மண்ணி லழியாப் புகழ்படைத்த மனுவின் குலத்திற்
சனநாத

வல்லான் மகிழ வவதரித்தா னரசர் சூளா
மணியென்பா [டைவா
னெண்ணெண் கலைநன் முழுதுணர்ந்தா னெழுவிற் ப
ளிவைதெரிந்தான்
பண்ணும் பரியும் பரிந்தேறும் பகடுஞ் செலுத்தல்
பயின்றனனே. (௨)

அந்த மகனைச் சனநாத வளவன் புடவிக்
கரசனெனத்
தந்து புலனைத் தையுமடக்கி முயன்றான் யோக
சாதனையை
மைந்த னவனி முழுதினையுந் தளரா தளித்து
மதிக்கவினை
சிந்து நிழலா லினைப்பகற்றி நடத்தா நின்றான்
செங்கோலை (௩)

மட்டா ரனைகளுஞ் சுவைதவிர வுரகா திபனு
மிளைப்பகலக்
கட்டா நின்ற வரியகழல் பகைத்தார் முடியிற்
கதிர்பரப்ப
வொட்டா ரளக்கும் பெருந்திறையா லிமையோ ருலக
மூடுருவக்
கொட்டா நிற்க முப்புரசும் புரந்தான் மனுவின்
குலமணியே. (௪)

எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

பொங்க லிப்படி யுயிர்பு ரந்தெழு
புடவி தன்னைய ளஞ்செய்வான்

சிங்க ளத்தவர் யவனர் பப்பரர்
 சீனர் சோனகர் கேரளர்
வங்கர் குச்சரர் கூர்ச்ச ரத்தவர்
 கோச லத்தர் வணங்கவே
துங்க பத்திரி தண்பு னற்சொரி
 தூய திங்களை மேவினான். (ரு)

கலிநிலைத்துறை.

அம்மை யிங்களை நாதற்கணு னடிபணிந் ததற்பின்
கம்பை யிங்களை யுமையிடத் திறைவனைக் கண்டு
பம்பை யிங்களை யழகிய நாதனைப் பணிந்து
செம்பொ னம்பல வாணனை வணங்கினான் சிரத்தால்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

கனவுருவ மாயிருந்தான் மலர்க்கையின்மான் பயந்தக
 லுங் கங்கை யாடன்
மனமுருகி வெதும்புமற்றை மலைமாதுந் தளருமென்
 றோ வடிவ மெல்லாம்
புனலுருவ மானவனை யமிர்தகதிர் புனைந்தவனைப் பொ
 ருந்துங் கோடி
தினகரனை நிகர்த்தவனைத் திருவானைக் காவானைச் சேவி
 த் தானே. (எ)

வெண்ணுவ னிழலானே யகிலாண்ட நாயகியா மேனை
 யீன்ற
பெண்ணுவ லுடனணைக்கும் பெருமானே மாணிக்கப்
 பிறங்கல் போலும்

வண்ணுவல் லசுரர்புர மெரித்தானை பெருங்கருணை
வழியா நிற்குங்
கண்ணுவல் லணிந்துமிடற் றானையென் றடிபணிந்து
களித்துப் போனன். (௨)

வேறு.

பொன்னி கடந்து சிவகங்கை முதலாந் தடங்கள்
புடைசூழ
பன்னி விளங்குஞ் சிராமலையின் சிகரக் கொழுந்தை
மணந்தகுழற்
கன்னி மயிலை விழிகுளிரக் கண்டா னுடலங்
களிப்புற்றன்
சென்னி வணங்கி யடிபணிந்து நடந்தான் மேலைத்
திசைதனிலே. (௩)

வேறு.

காவல னின்பொடு மேற்றிசை யின்புடை கானில்
வரும்பொழுதூர்
மாவுகை யுந்திறல் வீரர்மதங்கய மாவுகை
யுந்தகையோர்
மேவுதல் கண்டெதிர் சீறியு டன்றழல் வேகமி
குந்தலைநேர்
கூவியு கைந்தெதி ராகந டந்தொரு கோழிதொ
டர்ந்ததுவே. (௪)

மேலெழு மண்கிளை யாவிழு மென்சிறை வீசுமி
குந்தெழுகால்

போலெழு மிந்திர ஞாலமெ னும்படி போய்மறை
　　யுந்தனைமேல்
வாலைய றைந்திடு மோடிவ ருந்திசை மாறிவ
　　ருந்தனையே
கோலுமி ருஞ்சிறை தாழமு கங்கொடு கோதிவெ
　　கிர்ந்திடுமே. (மிக)

வேறு.

மரங்களி லொளிக்கு மீள வரையிடைக் குதிக்குந்
　　தீரர்
சிரங்களை நெருக்கும் வாசித் தலையின்மேற் செறியும்
　　யானைக்
கரங்களி லிருக்கும் பாகர் கவசமே லிருந்து
　　மேலம்
பரந்தனி லுகையுந் திண்டிற் றடிந்தெனப் பதுங்கு
　　போமே. (மிஉ)

மன்னவன் றனையெல்லா மருண்டதி சயிப்ப
　　வேழச்
சென்னியிற் செறிந்து சென்னி கவிகைமேற் செறிந்த
　　போது
பன்னிரு கரத்தோன் கோழிப் பதாகையா
　　னைகயாலே
யிங்கில வாசுங் கோழிக் கவிகையா னென்ன
　　வானன். (மிங)

வேறு.

கொதியாப் பறந்து கவிகையினுங் குதித்துச் சென்னி
குஞ்சரத்தை
புதையாச் சரண முள்ளழுந்த முகமுள் ளழுந்த
வுள்ளழுந்தப்
புதையாக் குருதி நதிப்படியா மதவா ரணையினும்
பொங்கியது
மதவா ரணத்தைக் கண்டக்கால் விடுமோ மற்ற
வாரணமே. (௰௪)

கலிவிருத்தம்.

பார்த்தனர் மன்னரும் படைக்கை வீரரு
மார்த்தனர் படையெலா மதிசயித்தன
கூர்த்திடு கணையயில் பரிசை விற்கொடு
வேர்த்தன ரரசனும் விலக்கி னனரோ. (௰௫)

அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

வலத்தினிற் பறந்து மீள விடப்புறம் வளைந்து
போந்து
நிலத்திடை நடந்து வான முகட்டிடை நெடிது
பாய்ந்து
சலத்தினிற் குதித்து மேகத் தலத்திடை யடங்கி
யைந்து
புலத்தையு மடக்கா யோகி மனமெனப் போயிற்
றன்றே. (௰௬)

இத்தல வாசியாவிப் பறவைபோ ரிளைத்த தாகு
முத்தம தலம்யா மிங்கே யுறைவது கருமமென்று

வத்தலத் தனந்த கோடி யரமிய மாச வீதி
சித்திர மாட கூடங் கோபுரஞ் செய்வித் தானே. (௰௭)

கலிவிருத்தம்.

மன்னர் வீதி நிறைந்தகை மாவின்மேற்
பொன்னி லாமணிந் தோரணம் பொங்குதன்
மின்னு மேக மிசைவென விண்ணவர்
வன்ன வில்லு வளைந்தது போலுமே. (௰௮)

போத கந்திண் மதந்தி போதலின்
பாதர் கண்டு மருண்டு வளம்புகை
சீத சந்தனந் தாற்றரை செய்ததன்
மீது சென்றுநம் வீதி புகுவரே. (௰௯)

செம்பொ ருட்குப் பிரிந்திடு செல்வர்க
டம்பு யத்திற் றழுவி மயங்குவா
ரம்பு யத்திரு வன்ன மடந்தையர்
கொம்பு சுற்றுங் கொடிக ணிகர்க்கவே. (௨௰)

தத்தை மார்விளை யாடிய தண்கழல்
முத்தி ராசி புகுந்து முகிற்கிடை
யுய்த்த மாரித் துளியொ டெதிர்ந்திடு
மெத்து மாரி விழுவன போலுமே. (௨௧)

ஆடு மஞ்ஞை யனைய மடந்தையர்
பாடு மங்கல வள்ளையின் பாடலுந்
தோடு தங்கு சுரும்பெழு சும்மையு
மோடு தேரி னுருளையி னோசையும். (௨௨)

வெங்க ளிற்றின் விரிந்த விரக்கமும்
மைங்க திப்பரி யாலு முழக்கமுஞ்
சங்கொ லிப்பதுந் தாளமி சைப்பதும்
பொங்கொ லிக்கட லேழும் பொருவுமே. (௨௩)

மைய லேற்ற வனங்கொ ளனங்கனை
யைய நீக்கி யழைப்பது போலவே
தைய லார்க டமனிபத் தாமரைச்
செய்ய பாதச் சிலம்பு புலம்புமே. (௨௪)

வேறு.

பற்றிய படிகமண் டபத்தின் பாங்கரிற்
சுற்றிய மரகதச் சிகரந் தோன்றுதல்
கொற்றமென் கனகபங் கயத்தின் கோல்வளை
யுற்றவ ளுறங்கிடு முதரி போலுமே. (௨௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

நக்கசெங் கமலத் தாது குடைந்ததி
னறவ மாந்தி
யெக்கர்வெண் மணற்குன் றேறி யிருஞ்சிறை
புலர்த்துந் தும்பி
செக்கர்வெண் பிறையை வாட்டுஞ் சிறுநுதன்
மடவார் கொங்கை
மைக்கருங் குவளை மாலை மாலையில்
வைகு மன்றே. (௨௬)

அரவுகொப் புளிக்கு நஞ்சு மமிர்தமு
மொழுகப் பார்வை

முருகுகொப் புளிக்கு முல்லை முகையென
விளங்க மூரா
விரவிகொப் புளிக்கும் வெய்யி லிருகுழை
யெறிப்பச் செங்கைக்
குருகுகொப் புளிக்கப் பந்து பயிலுவார்
கோடி பேரே. (உஎ)

பொற்கலா பார மின்னப் புணர்முலைக்
கலன்க ளோங்க
விற்கைமா ரனையும் விற்கும் புருவவில்
விழியம் பேவக்
கற்கொணு மழலை யன்னங் கலாபமா
மயூரஞ் சூழ
நற்கழங் காடிப் பாடு மாதராங்
நகர மெல்லாம். (உஅ)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மூசு வண்டு வாச முண்டு முகிலிடத்து
முரலவே
மாசில் கெண்டை மீனிரண்டு வள்ளை மீது
துள்ளவே
பூசல் கொண்ட வாளி யைந்து பூங்கருப்பு
பொழியவே
யூசலின்க ணாடுகின்ற மாத ரந்த
வூரெலாம். (உகூ)

மழைநு வழ்ந்த சிகர கூட மாந கர்க்குள்
வைவ
ணழகு மைந்த குங்கு மக்கு ழம்ப ளாவி
யறுபதங்
கொழுதி யங்க ராக நுங்கி மங்கை மாதர்
கொங்கையா
லுழுத சந்த னந்தி மிர்ந்த வொளிகு லாவு
மார்பினுன். (௧௰)

நயன மண்ட லஞ்செ றிந்த சயில மன்ன
வொளியநா
மிபம டங்க லெழுது செம்பொ னுச லத்தி
லெய்தினு [கை
னபிந யங்கள் பெறுகு ரும்பை யனைய கொங்
மங்கைமா
ருபய செங்கை கவரி வீச வூச லாடு
தாரினுன். (௧௧)

கலிநிலைத்துறை.

தோன்று மிக்கதை நிறுத்திமேற் கதையினைச் சொ
ல்கேன், கான்று தேன்கமழ் வாரிசங் குவளைசெங் கழு
நீ, ரான்ற சண்பகங் குருந்துமல் லிகைதள வனைத்து,
மூன்று காலமு மிறையவற் கணிந்தனன் முனிவன்.

எந்த நாணமக் கிறையவ னருள்செயு மென்றே
புந்தி மேவுற நினைந்துமா முனியுறை பொழுதி

னைந்து மாமுக னேவலா லழைக்க வந்ததுபோன்
மந்த மாருதங் கொணர்ந்தது புதுமலர் மணமே. (௩௩)

இன்ன பூமண மெதுவெனத் தெளிகிலா னிறைவன்
சொன்ன பூமண மிதுவென மனத்திறுற் றுணிந்தா
னன்ன போதினை யரியயற் கரியவற் கணிந்தார்க்
கென்ன பேறரி தென்பெற வருள்செயா னென்றான்.

தானு வானவற் கிம்மல ரணிந்தவர் தம்மைக்
காண வேண்டுமென் றிருந்தன னவன்றுயில் கனவி
ஞண முடை மாதர்தம் வரவெலா நானோ
வேண வாவினுற் றெளியலா மறைந்து நீவினவில்.

மனதி னெண்ணமு முடிந்திடு மெனச்சொலி மறைந்தா
கனவு தீர்ந்தபி னற்றையின் கடனெலாங் கழித்தா[ன்
னினன கன்றவல் லிருளிலோர் புறத்தொளித் திருந்தா
பனக நாட்டினு மடந்தையர் நடந்தனர் பாவ. [ன்

மண்ணி னிற்சிவ தடத்தொரு பிலத்து நல்வழியா
னண்ணி யற்புத மடந்தைய ரொழுவரு நடந்து
புண்ணி யச்செழும் போதுடன் புகன்றிடு பொருள்க
ளெண்ணி ரட்டியுங் கொணர்ந்துவந் தருச்சனை யியற்றி.

மின்னை நேருவார் வலஞ்செய்து வணங்கினர் மீண்டார்
மன்னு மாதவ னெழுந்தனர் முன்புபோய் வளைத்தான்
கன்னி மார்களு மதிசய மிதுவெனக் கருதி
யென்ன காரண மிவனமைத் தடுத்தவா றென்றார்.

எண்ணில் காலமா யிருட்பொழு திடையிவ ணெய்தி
யண்ணலார்பதந் தொழுதுமீண் டெம்முல கடைவோங்
கண்ணி னாலெமை யொருவருங் கண்டதாக் காணேம்
புண்ணி யாபுகல் யாவனீ யெனமுனி புகல்வான்.

என்ற னாயமுஞ் சாரனென் றிசைப்பரீ திருக்கச்
சென்று மாதவ ரிருடியர் மானவர் தேவர்
நன்றி யாலர வருச்சனை புரிவரே நன்மை
யன்றி மங்கைய ரருச்சனை புரிந்திட லாமோ (சுஎ)

அஞ்சு சுத்தியும் புரிந்துநல் லாகமந் தனைவே
வஞ்சி மங்கையர் பூசனை முடிப்பது வழக்கன்
றஞ்ச லிப்பதே கருமமஃ தடுக்குழி வென்று
னஞ்ச கற்றிய காருட மியற்றிய நாவான். (சுஅ)

உத்த மத்தவ னிவ்வணஞ் சொலவவ ருரைப்பார்
பத்தி பெற்றவர் யாவரும் பணியலாம் பரனைப்
புந்த னாவ னறிந்தது சிலகொலோ போதா
முத்தி பெற்றவ னல்லனோ வேடனு மொழிவீர். ( )

யானை யேமுத லெறும்பது கடையதா வனைத்தும்
வான நாடனை வழிபட லில்லையோ மலரான்
ஞான முற்றவ ரல்லரோ கிரியையி னடப்போ
ரேனை யோர்க்கெலாம் பத்தியே மூலமென் றிசைத்தார்.

வீர வேல்விழி மடந்தைய ரிவையெலாம் விளம்பச்
சார மாமுனி மொழிவனீ ருரைத்தது தகவே

யிர வன்பினோர்க் கருளுப தேசமு மெய்திற்
சேரு நன்கனி பாலுடன் கலந்திடு செயலாம். (சச)

பரவு கூர்விழி விடத்திறைற் கடிநடப் படத்நான்
மருவு நீண்மணிச் சுடிகையா ரெனவர லா
லுரக நாட்டுறை மடந்தையர்க் கொருபுடை யொப்பிர்
தெரிகி லேறுமை யாவர்நீ ரெனவுரை செய்வார். (சரு)

நாக நாட்டுறை யிறையவன் புதல்வியர் நாங்க
ளேக மாகவே யிந்தலந் தெழுவருமெய்திச்
சோக நீங்கிடப் பாதலப் புதுமலர் தொடுத்துப்
பாக வான்மதி முடியவற் கணிகுவோம் பரவி. (சசா)

கலிவிருத்தம்.

தத்துவங் கடந்தவர் தாயி னல்லவர்
பத்தருக் கினியவர் பரம யோகியர்
சித்தருக் கெளியவர் திருவி ளையகர்
புத்திரர்க் கரியவ ரென்று போற்றினார். (சஎ)

கலிநிலைத்துறை.

அரிவை மீரும தருச்சனை யழகிய ததற்கே
குரவர் பாலுப தேசமு நலமெனக் கூறப்
பரவி நல்லுப தேசநீ ரருள்கெனப் பகர்ந்தார்
தெரிவை மார்களுக் கருளின னவனுப தேசம். (சஅ)

அடிக ளேயுமக் கடியவர்க் கடியரோம் பதிக்கு, விடை
கொ டேகுவோ மெனச்சொலிப் பதத்தின்மேல் வீழ்ந்

தார், படவரவிறை புதல்விய மொழுவனைப் பார்த்துத்,
தொடர்பதானதன் பிறவியின்வரவெலாஞ்சொன்னான்.

இற்றை நாளிலென் கனவினி லிறையவ னெய்தி
யுற்ற வுங்களைக் காண்பது முதலெலா முரைத்தான்
சுற்றை வார்குழன் மடந்தையி ரவ்வணங் கண்டேன்
சுற்ற மாயினீ ருமக்குநங் கருத்தினைச் சொல்கேன்.

பாதலத்தினீர் கொணர்ந்தவிப் புதுமலர் பலவும்
பூதலத்திலே கொணர்ந்துநல் லருச்சனை புரியி
னோத மற்றிடு முத்தியா மெனவிறை யிசைத்தா
ராத லிப்புது நாண்மலர் வேண்டினே மதற்கா. (௫௩)

உங்க ணாட்டின்யாம் வருகுவோம் வருந்திற முரையீர்
அங்க நாட்டிய லிறத்தினீ ரெனச்சொனான் றவத்தோ
னெங்க ணாட்டினீர் வருகுவ தரிதரி தென்றார் [டியார்.
கொங்கை நாட்டமென் றிரண்டினுங் கொலைசெயுங் கொ

மலம தாம்வழி யுலகெலாங் கடுவிருட் பிழம்பு
விலகொ ணாத யாவரு மாசுண விடநீ
ரிலகு மன்னனைக் காணவு மருமையுண் டெவர்க்கு
மலரு மக்குவந் தெய்துமோ வருமையோ வறியோம்.

என்று கூறினார் யாவையு மிறையவ னியற்கை
யன்றி வேறிலை யடியவர் நினைவெலா மளிப்பான்
சென்று போதுமென் றுரைத்தனன் யோகியர் திலக
னன்று நீரொழுந் தருள்கவென் றவருமுன் னடந்தார்.

சிவத டக்கைப் பிலவழி முனியுடன் சென்று
தவமு தற்றனை யொருபுடை நிறுத்தியே தந்தைக்
குவகை யுற்றிடத் தவமுனி வரவினை யுரைத்தார்
பவம கற்றினான் றனையழை யெனவவர் பணித்தார்.

வந்தமர்தவ முனிவனைத் தவிசின் மேல் வைத்திட்
டெந்த மாதவ மியற்றினே னீர்வரவென்று
னந்த மாதவ னுரைசெய்வா னுலகமா மனைத்து
முந்து மல்லிகை யரும்பென முடித்திடு முதலே. (௫௪

வைய முண்டவன் றன்னையுந் தாங்கிடு மணியே
யைய னுடலை விழியினா லருந்துநல் லமிர்தே
மெய்ய தாகவே வியாகர ணங்களை விரித்தோ
யுய்யு மாறுனை யடைந்தன னெனவவ னுரைப்பான்.

வந்த காரியம் யாதென வுரைசெய்வான் மணச்செவ்
வந்திமாமலர் வேண்டியே யிவ்விடை வந்தே
னெந்தை யாயரு ளென்றன னெழுவரு மிசைத்தார்
தந்தை யான்முனி பிறப்புமற் றவன்செயுந் தவமும்.

மாத வத்தனே நறுமலர்ப் புதலைமண் ணுடனே
யோத கற்றியே கொண்டு போதுக வெனக்கொடுத்திட
டாத வற்கிணை யானசெம் மணிகளு மளித்து
மேதி னிக்கணே யருச்சனை புரிகென விடுத்தான்.

தன்க ணங்களிற் சிலர்தமை யழைத்திவர் தமக்குப்
பின்பு சென்றிடு மெனச்சொனா னவருடன் பெயர்ந்து

நின்ற வாவமு னடைந்துநீள் பிலவழி மீண்டு
அன்பி லாமுனி யவையெலாங் கோயின்முன் வைத்தான்

கலிவிருத்தம்.

வரமுனி கொணர்ந்தசெவ் வந்தி மாமுத
றரணியுந் தரணியிற் றருநல் வேண்டியோ
விரிகதிர்க் கரங்களை யூன்றி மேற்றிசை
யிருளுறு பாதலத் திறங்கி யிட்டதே. (௬௧)

முகிழ்நகை யிளமுலை முளரி வாண்முகப்
புகரயில் விழியினார் புலவி நீங்கினார்
மகிதல மிசைந்துசெவ் வந்தி வந்ததென்
றகிலமு நிறைந்துசெவ் வந்தி யானதே. (௬௨)

மேனிறை கங்குலின் விரிந்து வெள்ளிய
பானிறை யுடுக்கணம் பலவுந் தோன்றுதன்
மாநிலம் பாதல மல்லைக் காட்டுமுன்
வானமுங் காட்டிய வாறு போலுமே. (௬௩)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அட்டமா நாகந் தம்முட் குணதிசை
யரவந் தங்க
ளிட்டமா மிறைவ னீந்த புதன்மல
ரெடுக்கும் போது
கொட்டியே பழுது பார்த்துக் குயிற்றெனக்
கொடுத்த வெள்ளித்
தட்டமா மென்னக் கீழ்பாற் சந்திர
னுதயஞ் செய்தான். (௬௪)

கலிநிலைத்துறை.

கோத்த நித்தில மணியென மதியுடன் குழுமிப்
பூத்த மீனொளி மகன்றன விடிந்தது பொழுது
வாய்ந்த மாமுனிக் குதவியாய் மகபதி வகுத்த
வேற்று மானதின் பதலைபோற் கதிரவ னெழுந்தான்.

அந்த வேலையி னொருமொழி யுரைசெய்வா னமல
னிந்த நற்புதன் முதலையிவ் விடத்திலே யிசைத்தா
லந்த நற்புத லொன்றுதா றனந்தமாய் வளரும்
புந்தி யுற்றநம் மடியார்கைத் தானமே போல. (௬௬)

கலிவிருத்தம்.

அம்மொழி கேட்டபி னதனை யாங்கவன்
மெய்ம்மலை பேற்றிசை யடைய வித்தினு
னம்முத லனந்தமா யரும்பி யெங்கணுங்
கொய்மலர் விரிந்துதேன் கொப்பு ளித்ததே. ( )

சிவதடப் புனலினுற் றெளிந்த போதுகொய்
துவசையிற் சங்கநீ ரொருங்கு வீசியே
தவமுனி யனுதின மிறைக்குச் சாத்தினன்
கவலையும் பாவமுங் கரந்து போயவே. (௬அ)

பொறைநிறை தவமுனி புனைந்த தாரினு
லறுகணி முடிப்பிறை யழகு பெற்றது
மறுவற வலர்ந்தசெவ் வந்தி மாலையாற்
பிறையொளி விடுவது பேச வேண்டுமோ. (௬௯)

கலிநிலைத்துறை.

மெய்த்தவன் கதையினை யிடையிலே தடுத்துப்
முற்றதோர் கதையினை யுமக்கு நாம் பகர்வோஞ்
வர்க்கனென் றியற்பெயர் படைத்திடு சோழன்
ணிக்கெலா மன்னைபோன் முன்னவ தரித்தான்.

மாமுழ வாரணந் துச்சிமே லிருந்தோன்
குக்குட முயர்த்தொரு மயின்மிசை வருவோ
மாதவ னெனவுயி ரனைத்தையு மளித்துக்
மீதினி லிருந்தனன் பெரும்புகழ் குயிற்றி.

நாளிலோர் தினத்திலே மிருகயாத் திரைக்கு
கானகத் துலவிநற் றிரிசிரா மலையின்
யேகினன் பின்னருஞ் சாரமா முனிவன்
மார்வனத் தருகினுந் திரிந்தனன் கங்குல். (எஉ)

வீரனும் வேட்டைகொண் டெவுமவ் விரவி,
கன்னிய ரொழுவரு மவ்விடை நடந்து
நாரிய னருச்சனை புரியமுற் படியே
நீக்கிடு சிவதடங் குடைந்தனர் தொகையாய்.

கலிவிருத்தம்.

யுவதியர் கோதையி லொழுகு தேனினு
லவரவர் கயல்விழி யஞ்ச னத்தினுற்
குவிமுலை யெழுதிய குங்கு மத்தினுற்
சிவதட முழுவதுஞ் சேறு பட்டதே. (எச)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

வேட்டைமேல் விருப்ப மாகிக் கனைமிசை
யுலவும் வேந்தன்
கோட்டுவார் முலையார் மூழ்கிக் குளித்திடுஞ்
செயலை நோக்கி
நாட்டமா யிரங்கள் வேண்டு மெனச்சொலி
நைந்தான் பின்னைக்
காட்டுமான் கவர்வான் மின்னார் கலையெலாங்
கவர்ந்து போனான். (௭௫)

ஆயமங் கையர்க ளீரொண் ணாயிர
ரன்று வைத்த
தூயமென் கலையை வாரி யொளித்தவச்
சுதனே போலச்
சேயமென் கலைக ளெல்லாஞ் சிருட
னெடுத்துக் கொண்டு
மாயமோ வென்ன மற்றோ ரிடத்திலே
மறைந்து நின்றான். (௭௬)

கலிநிலைத்துறை.

கன்னி மார்களு மூழ்கிவந் தேறினார் கரையிற்
பொன்னின் மேகலை சொரிந்தன பதத்தின்மேற் புனலை
யன்ன மாதரைச் சிவநடப் புனலெனை யகலா
தின்னும் வாருமென் றழைத்தடி பணிந்ததா மெனவே.

வைத்த வெல்லையிற் றேடினார் கலைகளை மாறு
ரித்த டக்கரை யெய்தியார் கவர்ந்தவ ரென்றார்

சந்தியம் மிவை கவர்ந்தபேர் தாம்விடத் தழலுக்
கொத்த விந்தன மாவரோ வெனச்சொலி யுளைந்தார்.

இன்று பூசனை விலக்கிய பாவியிங் கெவனோ
வென்று கூறிநொந் திரங்கினு ரவர்களுக் கெதிரோ
குன்று போலிறை நடந்தனன் மடந்தையர் கூட
நின்ற மாசுண மிறைந்தன விடங்களா நெருப்பை.

கடுவி றைந்திடு கனலெலாங் கருடமந் திரத்தாற் [ன்
பொடிப டுத்திடு புனலிடைப் புகுந்தவன் போன்று
மடவை யொப்பெறும் விடந்தனைக் கருடமந் திரத்தாற்
படைப டுத்தினு னிவனெவ னெனவதி சயித்தார்.

ஆதி மம்பொரு நடையினர் பயந்துநின் றுரைப்பா
ராதி மன்னனீ யென்பதுன் வடிவினு லறிந்தோம்
பேதை வஞ்சியர்க் கிடர்விளைத் திடுவரோ பெரியோர்
நீதி யல்லவு நல்லற மல்லவு நினைந்தாய். (அக)

அலைவ கற்றுவ வுயிரினுக் கழகினை யளிப்ப
வுலகி னுக்கெலா முதவிய மகிழ்ச்சியை யுடைய
கலையெ னப்படு மறுபத்து நாலையுங் கடந்தோ
யிலகு மெங்கலை பறிப்பது நீதியோ வென்றார். (அஉ)

நாம முண்டிருண் டலைதருங் குழலியர் சொல்ல
வாம னென்னவே யுரைசெயா தேகினு னுரவோன்
றாம வேலினுன் வீரவேள் சூரவா தித்த
நாம னுடிது வல்லவோ வென்றுபி னடந்தார். (அங)

சூர வர்க்கனு மொழிகுவான் மடந்தைமீர் சொன்ன
பேரோ மக்குள துமக்குநா னிழைந்தது பிழையோ
வேரோ டுந்தசீ ரொழுவரி லொருவனை யிசையுங்
கார ணத்தினுன் மறைந்துநான் வாரினேன் கலையை.

அன்ன தாகுமென் றவரவர் கலையெலா மளித்துச்
சொன்ன போததற் குடன்படா தவர்களுஞ் சொல்வார்
மன்ன நீயெமைத் தந்தைதாய் கொடுத்திட வளையா
தின்ன வாசகம் பகருவ ததுபழு தென்றார். (அசு)

அரவ நாட்டவர் கடற்புவி யரசருக் காமோ
விருவை நேர்விட மயிர்துடன் சேருமோ வென்று
ரரச னேதுவா னுரகநாட் டவர்மணி யன்றோ
விரவி போலவெம் முடியின்மே லிருக்கும தென்றான்.

உங்க ளூட்டிறை யருளினு லுங்களை வரைதற்
கெங்க ளூட்டினின் றும்முடன் வருகுவே னென்றான்
செங்க ளூட்டிய மலரொலாஞ் சிவனடி சேர்த்துத்
தங்க ளூட்டினி லணுகினு ரரசனுந் தாமும். (அள)

சூதடுத்தபூண் முலையினார் தாதையைத் தொழுது
பாத லத்துநின் பெருமையும் வளமையும் பார்க்கப்
பூத லத்தினே ரரசனீங் கணைந்துபூம் பொழிலின்
மீத டுத்தன னெனச்சொல விறைவனும் வியந்தான்.

ஆபி ரம்பனு டவியினான் வருகவென் றருள
வாயி லாளருங் கொணர்ந்தனர் மனுகுல மணியைக்

கோயில் வாயிலைக் கடந்தவ னுறையிடங் குறுகித்
தூய தாண்மிசைப் பணிந்தன னழகுமேற் றுளும்ப.

அகில மன்னனும் வளவனை யணைந்துவந் தருளி
மகர நான்முகத் தவிசின்மே லமைவுற வைத்துப்
புகரி லின்னமிர் தளாவிய பனிமொழி புகன்றான்
சகல பாரமு மொருவனாத் தலைமிசைத் தரிப்போன்.

அனைய வாசக மவன்சொல வரவநாட் டரசே
புனையு நின்னெழில் காணவும் புகழவும் புகுந்தா
லுனது கண்கள்போ லாயிரந் திரட்டிக ளுளவோ
வினிய நாவுமப் படியெனக் குள்ளவோ விலையே.

ஊர்ப ரிப்பவர் நாட்டினை யளிப்பவ ருலகின்
சீர்ப ரிப்பவர் சிறுபுக ழுணர்ந்தமாய்ச் சிறக்குந்
தார்ப ரிப்பது நிகரொன மலரினான் சமைந்த
பார்ப ரித்துநின் றளிக்குநின் றகைமையார் பகர்வார்.

அன்ப னேயென மொழிந்தனன் மொழிந்தவற் கனந்த
னின்ப மாகவொன் றுரைசெய்வா னெமதுநா டெங்கு
முன்பு கார்விட நிறைந்ததிப் பொழுதுநின் மொழியாற்
றுன்ப நீங்கியின் னமிர்தமா யினதெனச் சொன்னான்.

விடைகொ டுத்தனன் வளவனும் பெயர்ந்தொரு வீதி
யிடைவ குத்ததோர் மாளிகைத் தவிசின்மே லிருந்தான்
படைம ணிக்கல மமிர்தம்வெண் சாமரம் பனிதந்
தொடைம லர்க்குலஞ் சந்தனம் விடுத்தனன் றுரையா.

